# அருள்மிகு சித்தேசுவர சுவாமி திருக்கோயில்

கஞ்சமலை

சேலம் மேற்கு வட்டம் மற்றும் மாவட்டம்



## தல வரலாறு





# அருள்மிகு சித்தேசுவர சுவாமி திருக்கோயில்

கஞ்சமலை

சேலம் மேற்கு வட்டம் மற்றும் மாவட்டம்



## தல வரலாறு

திருக்கோயில் வெளியீடு – 2019

திருக்கோயில் வெளியீடு

முதல் பதிப்பு - 2000

இரண்டாம் பதிப்பு - 2002

மூன்றாம் பதிப்பு - 2006

நான்காம் பதிப்பு - 2008

ஐந்தாம் பதிப்பு - 2012

ஆறாம் பதிப்பு - 2015

ஏழாம் பதிப்பு - 2017

எட்டாம் பதிப்பு - 2019

விலை ரூ. 30/-



## பதிப்புரை

சித்தர்கள் "ஓடும் செம்பொன்னும்" ஒன்றாகக் கருதும் புனிதர்கள். ஐம்புலன்களைக் காவலில் வைத்தவர்கள். அவர்கள் துன்பங்களைக் கடந்தவர்கள். அவர்களின் அருள் உள்ளம் மற்றையோரும் துன்பம் கடந்த வாழவேண்டும் என்று எண்ணியது.

சித்தர்களுள் முதல் சித்தராக நந்தி எம்பெருமானைக் குறிப்பிடுகின்றனர். நந்திதேவரின் அருள்பெற்றவர்கள் பிரம்மதேவர் குமார்களான சனகர், சனாதனர், சனந்தனர், சனத் குமாரர் என்னும் நல்வருடன் சிவமுனிவர், பதஞ்சலி முனிவர், வியாக்ரபாத் முனிவர் எனும் மூவரும் சேர்ந்து எழுவர் திருமூலருடன் எண்மராவர்.

திருமூலரிடம் இருந்து மந்திரோபதேசம் பெற்றவர்கள் மாலங்கள், இந்திரன், சோமன், பிரம்மன் உருத்திரன், கந்துரு, காலங்கி கஞ்சமலையான் என்ற எழுவரும் ஆவர்.

காலங்கி கஞ்சலை சித்தரின் சீடராய் விளங்கியவர்கள் அகோரர், மாளிகைத் தேவர், நாதாந்தர், பரமானந்தர், போகதேவர் எனும் ஐவராவர்.

மந்திரம்பெற்ற வழிமுறை மாலங்கள்<br>
இந்திரன் சோமன் பிரம்மன் உருத்திரன்<br>
கந்துரு காலங்கி கஞ்சமலையனோடு<br>
இந்த எழுவரும் என்வழியாமே.

- திருமந்திரன் - 132

கலந்தருள் காலங்கர் தம்பால் அகோரர்<br>
நலந்தரு மாளிகைத் தேவர் நாதாந்தர்<br>
பலங்கொள் பரமானந்தர் போகதேவர்<br>
நிலந்திகழ் மூலர் நிராமயத் தோரே.

- திருமந்திரன் - 2

செந்தமிழ் சிறக்கும் நம் தமிழ்நாட்டில் அமைந்துள்ள திருக்கோயில்கள் அனைத்தும் வரலாற்றுச் சின்னங்களாகவும்

சமயக்கருவூலங்களாகவும் திகழ்கின்றன. இத்திருக்கோயில்களுள் காலத்தால் மிகவும் முற்பட்டதும் சேலம் மாநகருக்கு மிக அருகில் அமைந்துள்ளதும். அமாவாசைக் கோயில் என்று எல்லோராலும் அழைக்கப்படுவதுமான அருள்மிகு சித்தேசுவரசுவாமி திருக்கோயில் மூர்த்தி தலம், தீர்த்தம் என்னும் மூவகைச் சிறப்புகளையும் பெற்றுத் திகழ்கிறது. இத்திருத்தலத்திற்கு சித்தர்களுள் சிறந்தவராக கருதப்படும் திருமந்திரம் இயற்றிய திருமூலர் தன்சீடர் காலங்கி நாதரோடு வந்து முதுமையான உடலை காயகல்பம் (இளமையாக மாற்றிக் கொண்டு) செய்து கொண்டு சென்றார் என்பது இத்திருத்தலத்தின் சிறப்புக்கும் எடுத்துக்காட்டாக விளங்குகிறது.

இத்திருக்கோயில் அமைந்துள்ள இத்திருத்தலத்திற்கு பெருமைகள் பல உண்டு. ஔவைக்கு அதியமான் அளித்த நரைதிசை மூப்பினை நீக்கவல்லதும், சாவா மருந்து என்று போற்றப்படுவதுமான கருநெல்லிக்கனி விளைந்தது இத்திருத்தலத்தில்தான். தில்லையம்பலத்தானுக்குப் பொற்கூரை வேற்வதற்குப் பொன் விளைந்தது இத்திருத்தலத்தில்தான். இரும்புத்தாது மிகுந்துள்ளதும் இத்திருத்தலம்தான். சாதலை நீக்கும் சஞ்சீவி மற்றும் மருத்துவ குணங்கள் மிகுந்த மூலிகைகள் நிறைந்து இருந்தது இத்திருத்தலத்தில்தான். மருத்துவ குணங்கள் மிகுந்த நீர் நிரம்பி இருப்பதும் இக்கஞ்சமலைத் திருததலத்தில்தான்.

எனவே அனைவரும் இந்நூலைப்படித்து இன்புற்று அருள்மிகு சித்தேசுவர சுவாமியின் அருளுக்குப் பாத்திரர்களாகும்படி அன்புடன் வேண்டுகிறோம்.

**கா. பரமேஸ்வரன்**
செயல் அலுவலர்

**தா. உமாதேவி**
தக்கார் / உதவி ஆணையர்



# அருள்மிகு சித்தேசுவர சுவாமி திருக்கோயில்

**கஞ்சமலை, சேலம் மேற்கு வட்டம் மற்றும் மாவட்டம்**

## தல வரலாறு

### தலச் சிறப்பு

**கஞ்சமலை பெயர் விளக்கம் :**

அருள்மிகு சித்தேசுவர சுவாமி திருக்கோயில் அமைந்துள்ள இடம் கஞ்சமலைத் தொடரின் அடிவாரம். கஞ்சம் என்ற சொல்லுக்கு பொன், இரும்பு, தாமரை என்ற மூன்று பொருள்கள் உண்டு. இம்மூன்று பொருள்களும் இங்கு (இம்மலைக்கு) பொருந்தும்.

கஞ்சம் என்பதற்கு முதல் பொருள் பொன் என்பதாகும். பராந்தக சோழன் தில்லைக்குப் பொன் ஓடு வேய்ந்தான் என்பது வரலாறு. ஆனந்தக் கூத்தாடும் பெருமானுக்குத் தங்க நிழல் (தங்கத்தாலான முகடைத்) தந்தது கஞ்சமலை. கஞ்சமலைப் பொன்னைக் கொண்டே பராந்தக சோழன் தில்லைக்குப் பொன் வேய்ந்து அதனை பொன்னம்பலம் ஆக்கினான்.

இத்திருக்கோயிலுக்கு அருகில் இம்மலையில் ஓடும் அருவி ஒன்று உள்ளது. இந்த அருவிக்கு பொன்னிநதி என்றும் ஒரு பெயர் உண்டு. இந்நதியில் உள்ள மணலைக் கரைத்து பொன் தாது எடுத்துள்ளனர்.

இத்திருத்தலத்திற்கு அருகில் பொன் செய்த இடம் பொன்னகர் என்றும் இப்பொன்னை மாற்றுரைத்துப் பார்த்த இடம் ஏழுமாத்தானூர் என்றும் வழங்கப்பெற்றுள்ளது. இவற்றுள் ஏழுமாத்தானூர் என்னும் ஊர் இன்றளவும் அதே பெயரில் இருந்து வருகிறது.

கஞ்சம் என்பதற்கு இரண்டாவது பொருள் இரும்பு என்பதாகும்.

கஞ்சமலையிலும் அதன் சுற்றுப்புறங்களிலும் இரும்புத்தாது மிகுந்துள்ளது. இம்மலைப் பாறைகளில் கருத்த இடங்கள் அனேகம். இவற்றில் காந்தத்தை வைத்தால் பிடித்துக்கொள்ளும். இக்கஞ்சமலையின் இரும்புத் தாதுவை அடிப்படையாகக் கொண்டுதான் சேலம் இரும்பாலை (உருக்காலை) இத்திருத்தலத்திற்கு மிக அருகில் அமைக்கப்பட்டது என்பது அண்மைக்கால வரலாற்று சான்று. மாவீரன் அலெக்சாண்டருக்கு போரஸ் (புருஷோத்தமன்) மன்னன் பரிசளித்த வாள் இக்கஞ்சமலை இரும்பினால் செய்யப் பெற்றது என்ற ஒரு வரலாற்றுச் செய்தியும் வழங்கப் பெறுகின்றது.

கருமை நிற மூலிகைகள் மற்ற மூலிகைகளை விட மருத்துவ குணம் மிக்கவை. கருமை படர்ந்த மூலிகைகளில் இரும்புச் சத்து அதிகம் என்பது தாவர நூலார் துணிபு. இக்கஞ்சமலைக் காட்டினுக்கு கருங்காடு என்று ஒரு பெயர் உண்டு. இக்கருங்காட்டில் கருமை நிற மூலிகைகள் ஏராளமாக உள்ளன.

## கருநெல்லி மரம்

பதினைந் தெனுஞ்சந்தி பாதஞ் தயக்கம்
மதிநைந்தி டச்செய்வினை மாறும் - பதியிற்
சந்த்த கருவுறுவந் தானும்வே றாகுத்
தனித்தகரு நெல்லிமரத் தால்.

குணம் :- (இதன் பொருள்) கருநெல்லி மரத்தினால் பதினைந்து வகை சந்நிபாதங்களும், மயக்கமும், மனோவியாதியும் நீங்கும் காயசித்தியுண்டாகும் என்க.

கஞ்சம் என்பதற்கு தாமரை என்பது மூன்றாவது பொருள். கஞ்சன் என்பது பிரம்மதேவன் பெயர்களுள் ஒன்று. தாமரைக் கருவினில் உதித்தால் பிரம்மனின் பெயர்களுள் ஒன்றாயிற்று. கஞ்சனால் (பிரம்மனால்) உண்டாக்கப்பட்ட மலை கஞ்சமலை ஆயிற்று.



இக்கஞ்சமலை கஞ்சனால் (பிரம்மனால்) உண்டாக்கப்பட்டது பற்றியும் அதன் சிறப்புப் பற்றியும் கரபுரநாதர் புராணம் கீழ்க்கண்டவாறு கூறுகிறது.

முன்னோரு காலத்தில் கோரக்கா, கருவூர்ச்சித்தர், கொங்கணர், மலைவாய்மலைச் சித்தர், நவநாதர், அகப்பைச் சித்தர், பாம்பாட்டிச் சித்தர், ஆதியுர்ச்சித்தர் எனும் சித்தர்கள் கற்ப மூலிகையை எங்கு தேடியும் கிடைக்காமையால் கஞ்சன் என்று பெயர் பெற்ற பிரம்மதேவனை நோக்கித் தவம் செய்தனர். அத்தவத்திற்கு மகிழ்ந்த பிரம்மதேவன் அவர்கள் முன்தோன்றிச் சகலவிதமான மூலிகைகளும் நிறைந்து இருக்கும் ஒரு மலையைச் சிருட்டித்துத் தருவதாகவும், இம்மலையின்கண் உள்ள காட்டிற்கு கருங்காடு என்று பெயர் விளங்கும் என்றும், இக்கருங்காட்டின்கண் கருநெல்லிமரம், வெள்ளைச்சாரணச் செடி, நிழல் சாயாமரங்கள், இரவில் ஒளி வீசம் ஜோதி விருட்சங்கள், உரோமத்தருக்கள், கனக மரங்கள், உடும்புகள் உண்ணாச் சஞ்சீவிகள் மற்றும் ஆயுதங்களால் உண்டான புண்ணை ஆற்றும் சல்லியகரணியும், ஒடிந்த உறுப்புகளை இணைக்கும் சந்தான கரணியும், புண்களை ஆற்றுவித்துச் சிறந்த உருவம் வழங்கும் சாவல்யகரணியும், உடலை விட்டகன்ற உயிரை மீட்கும் அமுத சஞ்சீவி கரணியும் இன்னும் எண்ணற்ற சித்கற்ப மூலிகைகள், வேர், கொழுந்து, கிழங்கு என நிரம்பி இருக்கும் என்றும் அம் மூலிகை வழி நீங்கள் கற்ப மருந்தினைச் செய்து உண்டு சிறக்கலாம் என்றும் அருளிச் செய்தார் என்று கரபுரநாதர் புராணச் செய்து கூறுகிறது.

மேற்கண்ட புராணச் செய்தியைப் புராணம் என்று அடியோடு மறுப்பதற்கில்லை. ஏனெனில் இம்மலையில் விளைந்த கருநெல்லிக் கனிதான், நரை, திரை, மூப்பு நீக்கும் சாவா மருந்தென்று தகடூரை (தர்மபுரி)த் தலைமையிடமாகக் கொண்டு ஆட்சி புரிந்த அதியமான் என்ற மன்னனால் ஔவைக்கு அளிக்கப்பட்டது என்பது அண்மைக்கால வரலாற்றுச் செய்தியாகும். தகடூரைத் (தர்மபுரி) தலைமையிடமாகக் கொண்டு ஆட்சி புரிந்த அதியமான் என்ற மன்னனின் கட்டுப்பாட்டில் இக்கஞ்சமலை அக்காலத்தில் இருந்துள்ளது.

இத்திருத்தலம் அமைந்துள்ள கஞ்சமலை மேற்கண்டவாறு எண்ணற்ற சிறப்புக்களைப் பெற்றுள்ளது. இக்கஞ்சமலைக்குச் சஞ்சீவிமலை என்பன போன்ற பெயர்களும் வழங்கப் பெறுகின்றன.

## உடலை விட்டு உயிரை நீங்க விடாத உன்னத சஞ்சீவி

**(தூக்கில் போட்டும் சாக விடாத சஞ்சீவி)**

இத்திருத்தலத்திற்குச் (கஞ்சமலைக்கு) சஞ்சீவி மலை என்ற பெயரும் வழங்கப்படுகின்றது. உடலை விட்டகன்ற உயிரை மீட்கும் அமுத கரணி இம்மலையில் இருந்ததால் இம்மலைக்கு சஞ்சீவி மலை என்ற பெயர் விளங்கியது. இதற்குச் சமீப காலச் சான்றாக இம்மலையில் அண்மைக் காலத்தில் வாழ்ந்த ஒரு கொள்ளையனின் கதையை இன்றளவும் இப்பகுதி மக்கள் பின்வருமாறு கூறி வருகின்றனர்.

இந்த மலையில் உள்ள காட்டில் கொள்ளையன் ஒருவன் வாழ்ந்து வந்தான். அவனது ஆசை நாயகி அவனுக்குத் தினமும் உணவு கொண்டு செல்வாள். அப்படி ஒரு முறை மீன் குழம்பு செய்து கொண்டு சென்ற போது மழை வந்துவிட்டது. அதனால் மலையில் இருந்த ஒரு புதருக்கடியில் சோற்று மூட்டையை இறக்கி வைத்தாள். சிறிது நேரம் கழித்து மலை நின்ற பிறகு இந்த சோற்று மூட்டையை தூக்கிச் சென்று தனது ஆசைநாயகனான கொள்ளையன் முன் வைத்து பிரித்தாளாம். அப்போது குழம்பில் இருந்த மீன்கள் உயிர்பெற்று துடித்துக் கொண்டிருந்ததாம். இதனைக் கண்ட கொள்ளையன் தனது ஆசை நாயகியிடம் விவரம் கேட்க, அவள் சோற்று மூட்டையை புதருக்கு அடியில் இறக்கி வைத்ததைப்பற்றிக் கூறினாளாம். உடனே கொள்ளையன் மேற்படி சோற்று மூட்டையை இறக்கி வைத்த இடத்தில் இருந்த புதருக்கு அருகில் சென்று பார்த்தபோது மழையில் நனைந்து எல்லாச் செடிகளும் தலைகவிழ்ந்து இருந்த நிலையில் ஒரே செடி மட்டும் தலைநிமிர்ந்து இருந்ததை கண்டு இந்தச் செடியை அறுத்துச் சுருட்டி தனது தொடையைக் கத்தியால் கிழித்து, கிழித்த இடத்தில் மேற்படி செடியை வைத்து உள்ளே அழுத்தியவுடன் கிழிந்த இடம் தானாக இணைந்துவிட்டது எனவும் கூறுகின்றனர். பின்னர் அவன் செய்த குற்றங்களுக்காக அவனைப் பிடித்து அரசங்காத்தார் தூக்கில் போட்டபோது அவன் சாகவில்லையாம். அப்படிப் பலமுறை தூக்கில் போட்டும் அவன் சாகாததால் அவனிடம் காரணம் கேட்டறிந்து அறுவை சிகிச்சை மூலம் தொடையில் இருந்து இருந்த செடியை அகற்றிய பிறகு தூக்கில் போட்டார்களாம்.

இந்தச் செடியின் (சஞ்சீவி) பெயரை மூலிகை ஆய்வாளர் ஒருவர் கல்பெரமி என்று கூறுகின்றனர். இந்த செய்தியின் மூலமும் இத்திருத்தலத்தில் உயிர்காக்கும் உன்னத சஞ்சீவி இருந்தது என்பது தெளிவாகத் தெரிகிறது.

## மூர்த்தியின் கீர்த்தி

இத்திருக்கோயிலில் எழுந்தருள்பாலித்துவரும் இறைவன் அருள்மிகு சித்தேசுவர சுவாமி ஆவார். மூலவர் அருள்மிகு சித்தேசுவர சுவாமி ஓர் இளம் யோகியின் உருவம். சின்முத்திரையுடன் வீராசனத்தில் (தவக்கோலத்தில்) மிகக் கம்பீரமாக அமர்ந்த கோலத்தில் அன்பர்களுக்குச் காட்சி தந்து அருள்பாலித்து வருகிறார்.

இத்தலத்து இறைவனைப் பற்றிச் கரபுரநாதர் புராணம் பின்வருமாறு கூறுகிறது.

மூலன் என்ற பெயர் கொண்ட அந்தணர் தன் தேகத்தை காயசித்தி (உடலை இளமையாக்குதல்) செய்து கொள்ளும் பொருட்டு நரை திரை மிக்க தன் சீடருடன் கருங்காடு வந்தடைந்தார்.

மூலிகை தேடிச் சென்ற மூலன் தன்சீடரிடம் சமையல் செய்யச் சொல்லிச் சென்றார். குருவின் ஆணைப்படி சமையல் செய்யத் தொடங்கினார். சோறு கொதித்துப் பொங்கியது. சோற்றைத் துழாவினார். இதனால் சோறு கருத்தது. சீடர் அஞ்சினார். அஞ்சிய சீடர் கருத்த சோற்றைத் தானுண்டு குருவிற்கு (மூலனுக்கு) வேறு சோறு சமைத்து வைத்தார். வியத்தகு விதத்தில் சீடர் உடல் நரைதிரை மாறி இளமை பெற்றது.

மூலிகை தேடிச் சென்ற குரு திரும்பினார். சீடர் இருந்த இடத்தை அடைந்தார். சீடரை அவரால் அடையாளம் காண இயலவில்லை. முதுமைநீங்கி இளமைமிகப் பெற்ற சீடரிடமே, இங்கிருந்த முதியவர் எங்கே என்று கேட்டார். தன் குருவின் திருவடிகளில் சீடர் வீழ்ந்து வணங்கினார். அடியேன் தான் தங்கள் சீடன் என்று கூறினார். நீ இளமை மிகப்பெற்ற விதம் கூறு எனக் கேட்க சீடர் நிகழ்ந்தவற்றைக் கூறினார்.

எந்த மூலிகையைத் தேடி அலைந்தோமோ அது இங்கேயே இருக்கின்றதே என அறியாமல் போனோமே என்று மகிழ்ந்த குரு எங்கே அந்தக் கொம்பு (குச்சி) என வினவினார். தங்களுக்கு (குருவிற்கு) அஞ்சிய நான் (அதன் மகிமை தெரியாமல்) அதனை அடுப்பில் போட்டு விட்டேன் என்றார் சீடர். திகைத்தார் குரு. கைக்கு எட்டியது வாய்க்கு எட்டவில்லையே. இனி என்ன செய்வது என்று எண்ணி வேறு வழியின்றி மாணாக்கன் உண்ட சோற்றைக்கக்க வைத்து அவர் கக்கியதைத் தான் உண்டு அவரும் (குருவும்) இளமையைப் பெற்றார். இவ்வாறு இருவரும் இளமையைப் பெற்றனர். இளம்பிள்ளை ஆயினர்.

இவ்வாறு மூலனும் அவரது சீடரும் இளமையைப் பெற்றதால் இத்திருத்தலத்திற்கு அருகில் உள்ள ஊர் இளம்பிள்ளை என்று பெயர் பெற்று இன்றுவரை அதே பெயரில் வழங்கி வருகின்றது.



முன்னமோர் காதை யுண்டு மூலனோர் இந்த ணாளன்
நன்னுடல் வலியச் செய்யச் சஞ்சீவி பெறவே யெண்ணி
மன்னுமா ணாக்க னோடே கருங்காட்டில் வந்து புக்கான்
அன்னமா ணாக்கன் மேனி ரைதிரை யாயிருப்பான்

இந்த மாணாக்கன் றன்னை அடுகைநீ செய்யென் யோதிப்
பந்தியின் மருந்து தேடிப் போயின யைலிற் சீடன்
உய்ந்திடக் கருநெல் லிக்கொம் பொன்றினால் அன்னந்து ழாவ
வெந்ததனங் கரிபோ லாக வெருவியன் னத்தை யுண்டான்

நரைதிரை மாறிமேனி நயந்தவீ ரெட்டாண் டேபோல்
புரையிலா அழகு பெற்றுப் புடமிடு பொன்போ லானான்
குருவுமே மீண்டு வந்து சீடனைக் குறுகி நின்றே
யொருவாரிங் கிவன்றா னாரோ உற்றன னென்ன வெண்ணி

நரைமுதிர் கிழவ னிங்கே நண்ணினோன் எங்கே போனான்
ஒருவன்நீ கண்டி லாயோ நீயாரிங் குரைத்தி என்ன
குருவிரு தாள்மேல் வழ்ந்தே கொடியனின் அடிமை யென்ன
வருவம்வே றாகிப் பால வெனனவுற்றாய் எதனால் என்ன

ஐயகேள் அடுகை செய்தேன் அன்னத்தைக் கருங்கொம் - பொன்றால்
கையினில் துழாவச் சோறு கறுத்தது வெருவி யுண்டேன்
மெய்யினில் வண்ண மாக விளைந்தது நினக்குச் சோறு
செய்திடல் வேறே யாகச் சிந்தனை செய்தேன் என்றான்.

துழாவிய கொம்பெங் கென்றான் சுள்ளியிற் போட்டேன் என்ன
வழாது நீயுண்டசோற்றை வாயினிற் கக்கென் றோத
விழாதசோ றதனைக் கக்க மிச்சிலைக் குருவு முண்டான்
தொழாரெவர் இவர்கள் தம்மைச் சுந்தரப் பால ரானார்.

**(கரபுர நாதர் புராணம் - கஞ்சமலைச் சருங்கம்)**

இத்திருத்தலத்தில் எழுந்தருள் பாலித்து வரும் அருள்மிகு சித்தேசுவரர் திருமூலரின் சீடரான கஞ்சமலைச் சித்தர் என்றழைக்கப்படும் காலங்கிநாதர் என்பது தெளிவாகிறது.

## ஈசனின் மூன்றாவது மகன்

இத்திருத்தலத்தை இறைவன் கலிங்க தேசத்தில் வேதமங்கலம் என்னும் ஊரில் வசித்தவர் என்றும் சுந்தரர் என்னும் திருப்பெயர் கொண்டவர் என்றும் உள்ளத்தில் கணப்பொழுதும் நீங்காத ஈசன் சிந்தனை கொண்டவர் என்றும் சிவத்தலங்கள் தோறும் சென்றார் என்றும் இவர் கொங்கு நாடு வந்து பஞ்சாக்கர நதிக்கரையில் அமர்ந்த கரபுரீசனை காதலாய்க் கசிந்து கண்ணீர் மல்க வணங்கினார் என்றும் கரபுரீசர் மான், மழு, திருநீலகண்டம், யானைத்தோல் போர்வை இவைகளுடன் இலிங்கத்தில் தோன்றிக் காட்சி தந்து கணபதிக்கும் கந்தனுக்கும் நிகராக உன்னை மூன்றாவதாக்க கொண்டோம். வேண்டுவன கேள் என்று கூற ஐயனே இம்மையில் காயசித்தியடைந்து இறவாதிருக்க வரம் அருள்க என வேண்டினார் என்றும். அதற்கு ஈசனும் சீலமிக்க நீ முக்தி அடைந்து சாகாவரம் பெற்றக் கலியுகத்தில் யாவரும் அறியாதபடி அரூபியாய் (உருவம் இல்லாமல்) இருந்து எம்மைப் பூசிப்பாய் என்றும் கஞ்சமலைச் சித்தர் எனும் பேர் உனக்கு நிலைக்கும் என்றும் நின்னைச் பூசித்தவர் என்னை பூசித்தவர் என்றும் ஈசன் அருளிச்செய்தார் என்று கரபுர நாதர் புராணம் கூறுகிறது.

இத்தலத்து இறைவனைப் பற்றி மெய்ஞ்ஞானவிழிப்பு என்னும் நூலில் அருள்மிகு சித்தேசுவராகிய காலங்கிநாதர் தான் பறக்கும் தன்மை பெற்ற சித்து நிலையில் சரீ ரத்தை இரும்புக்கல் தாதுவாக்கி காந்தநீர் சுழற்சியில் உள்ளிட்டு ஓட்ட கதியில் அம்மின் காந்த சக்தியினையே உயரிய ஒளி மின்காந்த சக்தியாக்கி, சரீர நிலைக்குக் கொண்டு தன் உயிர் ஆத்மாவையே மண்டலமாகச் சுழலச் செய்து இன்னும் வாழ்ந்து வருகின்றார் என்று கூறப்பட்டுள்ளது.

மேற்கூறப்பட்ட தன்மைக்கேற்ப இத்திருத்தலத்து இறைவன் வீராசனத்தில் (தவக்கோலத்தில்) அமர்ந்து அருள் பாலித்து வரும் கருவறைக்கு அருகில் ஒரு நீருற்று அமைந்துள்ளது. இந்நீருற்றிலிருந்து வற்றாத ஜீவநதியாக நீர் பெருக்கெடுத்து ஓடுகின்றது. இந்நீரே இத்திருத்தலத்தின் காந்த தீர்த்த திருக்குளத்தில் சேமிக்கப்படுகிறது. உபரிநீர் வடிகால் வழியாக ஓடையைச் சென்றடைகிறது.



## அருள்மிகு சித்தேசுவரர் நிகழ்த்திய அற்புதங்கள்

அருள்மிகு சித்தேசுவரர் திருக்கோயில் கொண்டுள்ள இக்கஞ்சமலை என்னும் மலைத்தொடரின் தென்புறத்தில் உத்தமசோழபுரம் எனும் கரபுர நகரில் வசித்தவன் காடன் என்பவன். காடனுக்கு நான்கு பெண்கள். காடனின் தங்கைக்கு ஒரு மகன் இருந்தான். இவ்விருவரது பிள்ளைகளும் வளர்ந்து பெரியவர்கள் ஆனார்கள். காடன் தனது மூத்த குமாரத்தியை உனக்கு மணம் செய்து வைக்கிறேன் என்று கூறித் தங்கையின் மைந்தனை தன்னிடத்தில் வேலைக்கு அமர்த்திக் கொண்டான்.

இவ்வாறு வாழ்ந்து வருகையில் காடனின் உறவினர்கள் அவனது மூத்த மகளுக்கு மணம் பேச வந்தனர். அதனால் காடன் தன் தங்கை மைந்தனிடம் அடுத்தவளை உனக்கு மணமுடித்துக் தருகிறேன் என்று கூற அவனும் அதற்கு ஒப்புக்கொண்டான். திருமணம் இனிதே நடந்தேறியது. இவ்வாறு தனது தங்கை மைந்தனிடம் காடன் முன்னர் உரைத்த உரை தவறிப் பொய்யான உறுதி கூறியே தனது இரண்டாவது மற்றும் மூன்றாவது பெண்ணுக்கும் வேறு இடங்களில் மணமுடித்தான்.

காடனின் வார்த்தைகளை நம்பி ஏமாந்த மருமகன் நான்காவது மகளுக்காகக் காத்திருந்தான். ஒரு நாள் மாமனும், மருமகனும் காட்டுவழிச் சென்று கொண்டிருக்கையில் எனது நான்காம் மகள் உனக்கே உரிமை என்றான் காடன். தன் மாமனின் வார்த்தைகளை நம்பாது மருமகன் மாமனே உன் வார்த்தைகள் என்வரையில் வீண் உன் பெண் எனக்குத் தேவையில்லை. நானும் வேறு இடம் செல்கிறேன். உனக்கு விருப்பமான இடத்தில் அவளை மணமுடித்து கொடு. உன்னையும் உன் வார்த்தைகளையும் உண்மை என நிரூபிக்க என்னிட் சாட்சி ஏது இல்லையே என்று வருந்திக் கூறினான்.

காடன் தன்து மருமகனின் உழைப்பை இழக்க விரும்பவில்லை. அதனால் மருமகனின் உழைப்பைப் பெற்றுக் கொண்டு வாய்ப்பு கிடைத்தால் மகளை வேறு நல்ல இடத்தில் மணம் முடிக்க வேண்டும் என்ற வஞ்சக எண்ணங்கொண்டு அதனை வெளிப்படையாகக் கூறினால் தன்து மருமகனின் உழைப்புத் தனக்குக் கிடைக்காது என்பதால் அப்போதைக்கு மருமகனைத் தன்னிடம் நிறுத்திக் கொள்ள எண்ணிய காடன் தம் எதிரில் வந்த கரடியைச் சாட்சியாக வைத்து, இக்கரடி சாட்சியாக என் நான்காம் மகளை உனக்கே தருகிறேன் என்றான். கரடியும் தலை அசைத்தது.

சில நாட்கள் கழிந்தபின் காடன் வழக்கம்போல் தன் மகளுக்கு வேறு மணமகன் பார்த்தான். கோப் கொண்ட மருமகன் தன் உறவினர்களைக் கூட்டி வழக்குரைத்தான். மாமன் சத்தியம் தவறினான். ஒரு முறையன்று, நான்கு முறை என்று, அவையோர் காடனை விசாரித்தனர். அவனோ மருமகனே பொய் கூறுகின்றான. நான் வாக்கு தவறவில்லை என்றான். காட்டுவழியில் கரடியைச் சாட்சி வைத்து நான்காவது பெண்ணை எனக்குச் தருவதாக கூறினான் மாமன் என்றான் மருமகன். மாமன் மறுத்தான்.

மாமனே தருமமே அழகிய மார்க்கம் பொய் மொழிதல் பாவமாகும். பொய் நரகினைத் தரும்.

இம்மைபோய் நரகத்திடை யிருத்திடும் பொய்யே மாமனே பொய் உரைத்த தாழம்பூ சங்கரன் கோபத்தைப் பெற்றது. ஆசிரியரிடம் மனமறியாது தருர் உரைத்த பொய் அவரை நரகினைத் தரிசிக்க வைத்தது.

அசத்தியம், கொலை, திருட்டு, கள்ளுண்ணல், குருநிந்தை செய்தல் என்னும் இவ்வைந்துமே பஞ்சமா பாவங்கள். உண்மையின் உயர்பயனை அறியாதவரரதான் பயனின்றிப் பொய் பேசுவார். ஆதலால் எனது வார்தையை ஒரு சாட்சியைக் கொண்டு நிரூபிப்பேன் என்று சபையோர்க்குக் கூறி உமாபதியின் திருவருள் பொருந்தக் கடவதென்றெண்ணி அன்று தலையசைத்த கரடி சத்தியம் தவறாது என்று எண்ணிக் கரடியை மனதில் தியானித்தான்.



காடன் தன் மருகனை ஏமாற்றி எண்ணி வழியில் வந்த கரடியைச் சாட்சியாக வைத்தான். ஆனால் அக்கரடி அடியாரின் இதயக் கமலத்தில் வாசம் செய்யும் அருள்மிகு சித்தேசுவரர் என்பதை அவன் அறியவில்லை. அன்று காலங்கிச் சித்தர் கரடி உருவில் கரபுரநாதனைப் பூசிக்க வந்தார் என்பதைக் காடன் எப்படி அறிவான்.

ஆற்றாமனத்துடன் ஏழைவாலிபன் நெஞ்சில் எண்ணவே அது சென்று கஞ்சமலைச் சித்தரின் இதயத்தில் தோய்ந்தது. கமலமுனி கரடி உருக்கொண்டார். அவையில் உள்ளவர் அனைவரும் தரிசிக்கும்படி சத்தியம் வெல்லும் என்னும் மூதுரையை மெய்பிக்கம்படித் தோன்றினார். கரடியாக உருக்கொண்ட சித்தர் மூன்று முறை தலை அசைத்தார். அறம் வென்றது. காடன் தலை கவிழ்ந்தான். காடனின் மகளுக்கும் காடனின் தங்கை மைந்தனுக்கும் குல முறைப்படித் திருமணம் இனிது நிறைவேறியது.

இத்திருக்கோயிலில் எழுந்தருள் பாலித்துவரும் அருள்மிகு சித்தேசுவரர் இதுபோல் பல திருவிளையாடல்களைப் புரிந்து வந்தார் என்று கரபுரநாதர் புராணம் கூறுகிறது.

## தீர்த்தச் சிறப்பு

கஞ்சமலை என்னும் இத்திருக்கோயில் அமைந்துள்ள தித்தலம் கனிமவளம் மிக்கது போல் நீர்வளம் மிக்கதும் ஆகும். இத்திருக்கோயில் வளாகத்தில் (சற்றேறத்தாழ 60 ஏக்கர் பரப்பு) எங்கு தோண்டினாலும் தரைமட்டத்தில் இருந்து 3 அடி அழத்தில் நீர்வளம் மிகுந்து உள்ளது. இதே போல் மலையின் முகட்டில் ஒரு ஓடையும் மலையின் தென்மேற்குப் பகுதியில் ஒரு சுனையும் உள்ளது. அவற்றிலும் நீர் வற்றுவதே இல்லை.

காந்த தீர்த்தம் :- இத்திருக்கோயிலுக்கு பின்புறத்தில் திருக்குளம் அமைந்துள்ளது. இத்திருக்குளத்திற்கு காந்த தீர்த்தக்குளம் என்று பெயர். இத்திருக்குளத்திற்கு, அருள்மிகு சித்தேசுவர சுவாமியின் கருவறைக்கும் பின்புறம் படிக்கட்டுகள் அமைந்துள்ளன. படிக்கட்டுக்கு அருகில் ஒரு நந்தி அமைக்கப்பட்டுள்ளது. திருக்கோயிலுக்கு தென்புறம்

கிழக்கு மேற்காகவும், ஒரு சிற்றோடை ஓடுகிறது. இந்த ஓடையில் வற்றாத ஜீவநதிபோல் ஆண்டுதோறும் நீர்வற்றாது ஓடிக்கொண்டே இருக்கும். கடுமையான வறட்சி காலத்திலும் நீர் வற்றுவது இல்லை. இது இத்தலத்தின் தனிச்சிறப்பு ஆகும்.

இத்திருக்கோயிலில் எழுந்தருளி பாலித்து வரும் இறைவனின் கருவறைக்கிலிருந்து பாறைகளுக்கிடையில் உள்ள இடைவெளி வழியாக ஒரு நீருற்று வற்றாது பெருக்கெடுத்து ஓடி கொண்டேயுள்ளது. இந்த நீரூற்றிலிருந்து வரும் நீர்தான் திருக்குளத்தில் சேமிக்கப்படுகிறது. திருக்குளத்திலிருந்து உபரிநீர் வெளியேறுவதற்கு வடிகால் அமைக்கப்பட்டுள்ளது. நீரூற்றிலுருந்து வரும் நீர் திருக்குளத்தில் தேங்கியது போக மீதமுள்ள உபரிநீர் வடிகால் வழியாக வெளியேறிக் கொண்டே இருக்கிறது. இதனால் இத்திருக்குளத்தின் நீர் கெடுவதே இல்லை. இத்திருக்குளத்து நீர்தான் இத்திருத்தலத்து இறைவனுக்கு அபிஷேகம் மற்றும் நைவேத்யப் பிரசாதம் செய்வதற்குப் பயன்படுத்தப்படுகிறது.

மருத்துவ குணங்கள் :- இத்திருத்தலத்தில் கனிம வளம் மற்றும் மூலிகைவளம் மிகுந்துள்ளதால், இத்திருத்தலத்தில் உள்ள நீரில் மருத்துவ குணங்கள் மிகுந்துள்ளன. உடலில் பருக்கள் உள்ளோர் கஞ்சமலைச் சித்தரை இருந்து இடத்தில் இருந்தே மூன்று அமாவாசைக்கட்குத் தரிசிக்க வருவதாக வேண்டிக் கொள்கின்றனர். பருக்கள் மறைந்து விடுகின்றன. இவ்வாறு குணடைந்தோர இத்திருக்கோயிலுக்கு வந்து நீராடி உப்பையும், மிளகையும் வெல்லத்தையும் வாங்கி காந்த தீர்த்த குளத்தில் இட்டுச் சித்தரை வழிபட்டுச் செல்கின்றனர். ஒவ்வொரு அமாவாசை தோறும் பல்லாயிரக்க கணக்கான மக்கள் இத்திருக்கோயிலுக்கு வந்து நீராட்டி இத்தலத்து இறைவன் அருள்மிகு சித்தேசுவர சுவாமியை வழிபட்டுச் செல்கின்றனர்.

இத்திருக்கோயிலுக்கு அருகில் ஓடும் சிற்றோடையின் கரைகளில் பலநாழிக் கிணறுகள் (சிறு கிணறுகள்) உள்ளன். இக்கிணறுகளில் கைக்கெட்டும் உயரத்தில் நீர் உள்ளது. இக்கிணறுகளில் இருந்து வாளிகள் மூலம் நீர் எடுத்து சளிக்காமல் குளிக்கின்றனர்.



இத்திருக்கோயிலுக்கு அருகில் சுற்றுப்புற ஊர்களில் உள்ள மக்கள் நாள்தோறும் அதிகாலையிலேயே இங்கு வந்து நீராடி இறைவனை வழிபட்டுச் செல்வதை வழக்கமாகக் கொண்டுள்ளனர். அதிகாலை முதல் இருட்டும் வரை இங்கு நீராடுவதற்கு மக்கள் நாள்தோறும் வந்து செல்கின்றனர்.

இத்திருக்கோயில் காந்த தீர்த்தக் குளத்தில் உள்ள தீர்த்தத்தில் உப்பும், வெல்லமும் கரைவது போல துன்பங்களும், துயரங்களும் கரைந்து விடகின்றன என்பது துணிபு எவ்வளவு உப்பு போட்டாலும் தீர்த்தக் குளத்தில் உள்ள நீர் கரிப்பதில்லை.

இத்திருக்கோயில் அமைந்துள்ள கஞ்சமலையில் முன்னரே கூறியுள்ளதுபோல் பல்வேறு வகைப்பாடுகளைக் கொண்ட மூலிகைகளின் குணநலன்கள் இத்திருத்தலத்தில் உள்ள நீரில் மிகுந்து இருப்பதால் இத்திருத்தலத்து தீர்த்தத்தின் மகத்துவம் அளிவிடற்கரியது ஆகும். இதன் பயனாக இத்தலத்திற்கு வந்து நீராடினால் நோய்கள் பல நீங்குகின்றன என்பது கண்கூடு.

## பூஜைகளும் திருவிழாக்களும்

அருள்மிகு சித்தேசுவர சுவாமிக்குத் தினசரி சுத்த அன்னத்துடன் உச்சிகால பூஜை சிறப்புற நடைபெறுகிறது. பூஜை காமிக, ஆகம முறைப்படி நடைபெறுகிறது. உச்சிகால பூஜை சிவாச்சாரியார்களால் மடியுடன் (நீராடி உலராத ஆடையுடன்) நியமநிஷ்டையுடன் செய்யப்பட்டு வருகிறது. தினசரி பூஜைக்கு மடியுடன் அரைத்த சந்தனமே பயன்படுத்தப்படுகிறது. அமாவாசை மற்றும் பௌர்ணமி சிறப்பு நாட்கள் ஆகும். அமாவாசைக் கோயில் என்பது இத்திருக்கோயிலின் சிறப்புப் பெயர். அமாவாசை நாட்களில் சித்தர்கள் பலரும் இங்கு திரளுகின்றனர் எனும் நம்பிக்கையில் மக்கள் பல்லாயிரக்கணக்கில் ஒவ்வொரு அமாவாசை தோறும் இங்கு வந்து இறைவனை வழிபட்டுச் செல்கின்றனர்.

சித்தர் சிறப்பு என்பது இத்திருக்கோயிலின் பெருந்திருவிழா ஆகும். சித்திரை மாதம் இரண்டாம் செவ்வாய் கிழமைகளில் இருந்து

சித்திரை மாதம் இரண்டாம் செவ்வாய் கிழமைகளில் இருந்து இப்பெருந்திருவிழா தொடங்குகின்றது.

சித்திரை மாதம் இரண்டாவது செவ்வாய்கிழமை மேல் சித்தர் சிறப்பு நடைபெறும்.

இத்திருக்கோயிலில் எழுந்தருள் பாலித்துவரும் அருள்மிகு சித்தேசுவரரைப் பற்றி கர்ணபரம்பரையாக கதை ஒன்று சொல்லப்பட்டு வருகின்றது. இக்கதையின் அடிப்படையிலேயே இத்திருக்கோயிலின் பெருந்திருவிழாவான சித்தர் சிறப்பு கொண்டாடப்பட்டு வருகிறது. மேற்படி கர்ண பரம்பரைக் கதை கீழ்வருமாறு கூறப்படுகிறது.

இத்திருக்கோயில் அமைந்துள்ள கஞ்சமலை அடிவாரத்தில் அமைந்துள்ள ஊர் நல்லணம்பட்டியாகும். இவ்வூரில் வாழும் மக்களுக்குச் சொந்தமான மாடுகளை மேய்க்க இம்மலையில் உள்ள காட்டிற்கு மாடு மேய்க்கும் சிறுவர்கள் ஓட்டிச்சென்று மேய்ப்பது வழக்கம். அவ்வாறு இம்மலையில் கூடும் மாடு மேய்க்கும் சிறுவர்கள் பொழுதுபோக்கான விளையாடுவது வழக்கம். அவ்வாறு விளையாடும் சிறுவர் கூட்டத்தில் தினந்தோறும் புதிய சிறுவன் ஒருவன் கலந்து கொள்வான். விளையாட்டில் தோற்றவர் தலையில் வென்றவர் குட்டுவது வழக்கம். தினந்தோறும் புதிய சிறுவனே விளையாட்டில் வென்றான். தோற்ற சிறுவர்கள் தலையில் குட்டுவான்.

மேற்கண்டவாறு விளையாடும் சிறுவர்கள் சாப்பிடும் நேரத்தில் புதிய சிறுவன் மாடுகளின் மடிகளில் பால் குடித்து வந்தான்.

நாள்தோறும் குட்டுப்பட்ட சிறுவன் இந்த விவரங்களை தன் வீட்டில் சொல்ல வேண்டும் என்று எண்ணிக்கொண்டு வீட்டிற்குச் செல்வான். ஆனால் மறந்துவிடுவான். இதனால் ஒருநாள் அந்தச் சிறுவன் இந்த விவரங்களை கூறுவதற்காக தன்னுடைய ஆடையில் ஒரு முடிச்சு போட்டுக்கொண்டு வீட்டிற்குச் சென்றான். வீட்டில் உள்ளவர்கள் ஆடையில் உள்ள முடிச்சு என்ன என்று கேட்ட போது மேற்கண்ட



விவரங்களைக்கூறி முறையிட்டான். அவன் தந்தை அடுத்த நாள் மலைக்குச் சென்று ஒளிந்து இருந்து கவனித்தான். வழக்கம்போல் விளையாட்டு நடைபெற்றது. புதிய சிறுவன் அனைவரையும் வென்றான். வழக்கம்போல் தோற்றவர் தலையில் குட்டினான். பின்னர் அனைவரும் சாப்பிடச் சென்றதும் புதிய சிறுவன் மாடுகளின் மடிகளில் பால் குடித்தான். இவற்றை கண்காணித்த ஒளிந்திருந்தவன் மாட்டிடம் பால் குடித்த சிறுவனை மாடு கட்டும் பூட்டால் கயிற்றினால் அடித்ததால். அடிதாங்க முடியாத சிறுவன் தற்போது கருவறை அமைந்துள்ள இடத்தில் இருந்த சங்கலைச் செடிப்புதரினுல் சென்று அமர்ந்துவிட்டார் என்று கூறப்படுகிறது.

அடிபட்டது சித்தர் என்பதையும் அடிபட்ட பின்னர் சித்தர் இத்திருக்கோயில் கருவறை உள்ள இடத்தில் தவக்கோலத்தில் (வீராசனத்தல்) அமர்ந்து விட்டதைப் பற்றியும் அவரது சிறப்புகள் பற்றியும் பின்னர் தாரமங்கலம் கெட்டி முதலியார் ஒருவர்தான் கனவில் கண்டு கூறியதை கேட்டு உணர்ந்த இவ்வூர் (நல்லண்ணம்பட்டி) மக்கள் தாங்கள் செய்த தவறுக்கு (அடித்ததற்கு) பிராயசித்தமாக இத்தலத்து இறைவனிடம் மன்னிப்பு வேண்டி சித்தரை அடித்தவர் சித்தர்போல் அலங்கரித்துக் கொண்டு சித்தர் சிறப்பு பெருந்திருவிழாவின்போது சந்தனக்கட்டை மற்றும் பூட்டாங்கயிற்றால் அடிப்படுகின்றனர். இந்நிகழ்ச்சியின் அடிப்படையில் இன்றளவும் இப்பெருந்திருவிழா நடைபெற்று வருகின்றது.

சித்தரை அடித்தாக கூறப்படும் நல்லணம்பட்டி திருமலைக்கவுண்டர் வகையறாவினர் ஓராண்டு முழுவதும் முடி எடுத்துக்கொள்ளாமல் இருந்து சித்தர் சிறப்பின்போது முடி எடுத்து, நீராடி உடலெங்கும் சந்தனம்பூசி, உருளுதண்டமிட்டு அருள்மிகு சித்தேசுவர சுவாமிக்கு முன் அமர்வார். அவரை நல்லண்ணம்பட்டி முத்து வைத்திக்கவுண்டர் வகையறாவினர் தங்களை சித்தரின் அடிமைகளாக பாவித்து சந்தனக்கட்டை மற்றும் பூட்டாங்கயிற்றால் (நூலாடையினால் பூட்டாங் கயிறுபோல் செய்து) அடிப்பர். அன்று சித்தர் அடிபட்டதை நினைவூட்டும்

செவ்வாய் கிழமைகளில் இப்பெருந்திருவிழா தொடங்குகின்றது.

சித்திரை மாதம் இரண்டாவது செவ்வாய்கிழமை மேல் சித்தர் சிறப்பு நடைபெறும்.

இத்திருக்கோயிலில் எழுந்தருள் பாலித்துவரும் அருள்மிகு சித்தேசுவரரைப் பற்றி கர்ணபரம்பரையாக கதை ஒன்று சொல்லப்பட்டு வருகின்றது. இக்கதையின் அடிப்படையிலேயே இத்திருக்கோயிலின் பெருந்திருவிழாவான சித்தர் சிறப்பு கொண்டாடப்பட்டு வருகிறது. மேற்படி கர்ண பரம்பரைக் கதை கீழ்வருமாறு கூறப்படுகிறது.

இத்திருக்கோயில் அமைந்துள்ள கஞ்சமலை அடிவாரத்தில் அமைந்துள்ள ஊர் நல்லணம்பட்டியாகும். இவ்வூரில் வாழும் மக்களுக்குச் சொந்தமான மாடுகளை மேய்க்க இம்மலையில் உள்ள காட்டிற்கு மாடு மேய்க்கும் சிறுவர்கள் ஓட்டிச்சென்று மேய்ப்பது வழக்கம். அவ்வாறு இம்மலையில் கூடும் மாடு மேய்க்கும் சிறுவர்கள் பொழுதுபோக்கான விளையாட்டு விளையாடுவது வழக்கம். அவ்வாறு விளையாடும் சிறுவர் கூட்டத்தில் தினந்தோறும் புதிய சிறுவன் ஒருவன் கலந்து கொள்வான். விளையாட்டில் தோற்றவர் தலையில் வென்றவர் குட்டுவது வழக்கம். தினந்தோறும் புதிய சிறுவனே விளையாட்டில் வென்றான். தோற்ற சிறுவர்கள் தலையில் குட்டுவான்.

மேற்கண்டவாறு விளையாடும் சிறுவர்கள் சாப்பிடும் நேரத்தில் புதிய சிறுவன் மாடுகளின் மடிகளில் பால் குடித்து வந்தான்.

நாள்தோறும் குட்டுப்பட்ட சிறுவன் இந்த விவரங்களை தன் வீட்டில் சொல்ல வேண்டும் என்று எண்ணிக்கொண்டு வீட்டிற்குச் செல்வான். ஆனால் மறந்துவிடுவான். இதனால் ஒருநாள் அந்தச் சிறுவன் இந்த விவரங்களை கூறுவதற்காக தன்னுடைய ஆடையில் ஒரு முடிச்சு போட்டுக்கொண்டு வீட்டிற்குச் சென்றான். வீட்டில் உள்ளவர்கள் ஆடையில் உள்ள முடிச்சு என்ன என்று கேட்ட போது மேற்கண்ட



அவரவர்கள் தங்கள் விருப்பப்படி பிரார்த்தனை செய்து கொள்கின்றனர். அவர்கள் வேண்டியன வேண்டியவாறே கைவரப்பெறுகின்றனர். தங்கள் பிரார்த்தனைக் காணிக்கைகளை தாங்கள் விரும்பியவாறு செலுத்துகின்றனர். மேலும் பசுமாடு, பசுங்கன்று, காளைக்கன்று, சேவல் முதலியவைகளையும் பக்தர்கள் தங்கள் பிரார்த்தனைக் காணிக்கையாக செலுத்துகின்றனர். இத்திருத்தலத்து இறைவனுக்கு பெருமளவில் பக்தர்கள் முடிக்காணிக்கையும் செலுத்துக்கின்றனர். அருள்மிகு சித்தேசுவர சுவாமியிடம் பக்தர்கள் வேண்டுதல் செய்து, அவர்கள் விரும்பியபடி மேற்படி வேண்டுதல்கள் நிறைவேறுவது இன்றளவும் நிகழ்ந்து வருகிறது. இதனைக் கண்கூடாகக் காணலாம்.

**கனிமச் சிறப்பு** :- இத்திருக்கோயில் அமைந்துள்ள கஞ்சமலை கனிமவளம் மிகுந்தது. இம்மலையில் மிகுந்துள்ள இரும்புத்தாதுவை அடிப்படையாகக் கொண்டுதான் சேலம் இரும்பாலை இத்திருக்கோயிலுக்கு அருகில் அமைக்கப்பட்டுள்ளது. மாவீரன் அலெக்சாண்டருக்கு போரஸ் மன்னன் பரிசளித்த வாள். இக்கஞ்சமலையின் இரும்பில் செய்யப்பட்டது என்று கூறப்படுகிறது.

**மூலிகைச் சிறப்பு** : கனிமவளம் மிகுந்த இம்மலையில் அரியபல மூலிகைகள் உள்ளன. நரை, திரை, மூப்பினை நீக்கியதும். சாவாமருந்தென்று போற்றப்பட்டதும், இத்திருத்தலத்து இறைவன் இளமை மிகப்பெற ஏதுவான கருநெல்லிக் கொம்பு (குச்சி) தான் வாழ்வது தனக்குதான் பயன் தமிழ்வாழ வேண்டும் எனக்கூறிக் கடையேறு வள்ளள்களுள் ஒருவரான தகடூரை (தர்மபுரி) ஆண்ட அதியமான் என்னும் மன்னன் ஔவை மூதாட்டியிடம் கொடுத்த கருநெல்லிக்கனி இத்திருக்கோயில் அமைந்துள்ள கஞ்சமலையில் விளைந்ததுதான்.

**தீர்த்தச் சிறப்பு** : இத்திருத்தலத்தில் கனிமவளம் மற்றும் மூலிகைவளம் மிகுந்துள்ளதால் இத்திருத்தலத்தில் உள்ள நீரில் மருத்துவ குணங்கள் மிகுந்துள்ளது. இதனால் இத்திருத்தலத்தின் தீர்த்தம் சிறப்பு வாய்ந்ததாக உள்ளது.

**சுற்றுலாச் சிறப்பு :-** இத்திருக்கோயில் அமைந்துள்ள இடம் சிறந்த சுற்றுலாத் தலமாகவும் விளங்கி வருகின்றது. பொதுமக்கள் பெருமளவில் இங்கு வந்து இயற்கைச் சூழலில் இளைப்பாறி இத்திருத்தலத்து இறைவனை வழிபட்டுச் செல்கின்றனர். இதனால் இத்திருக்கோயில் அனைத்து மக்களையும் தன்பால் ஈர்க்கும் தன்மை கொண்டதாக விளங்குகிறது.

## நிர்வாகம்

இத்திருக்கோயில் நிர்வாகம் தமிழ்நாடு இந்து சமய அறநிலையத் ஆட்சித்துறையின் கட்டுப்பாட்டில் உள்ளது. சென்னை துணை ஆணையரின் டி.ற. சூடி. 45/1959 26-8-1959ன் படி நிர்வாகம் நடைபெற்று வருகின்றது.

## கஞ்சமலையில் தங்கம் விளைந்த செய்தி

கார்மேகக் கவிஞர் இயற்றி கொங்கு மண்டலச் சதகம் என்னும் நூலில் 26-ம் பக்கத்தில் 29-வது பாடலான பற்றறுத்தாளும்... என்று தொடங்கும் பாடலுக்கு பொருள் கூறும்போது கஞ்சமலையில் தங்கம் விளைந்த செய்தியை வரலாறு என்று தலைப்பிட்டுக் கூறுகின்றார். அது கீழ்வருமாறு.

வரலாறு : கீழ்கரை பூந்துறை நாட்டின் இணைநாடு பருத்திப்பள்ளி நாடு ஆகும். அந்நாட்டில் உள்ள கஞ்சமலையில் ஒரு சிறுவாரி உற்பத்தி ஆகி வருகிறது. அது மகுடஞ்சாவடி ரயில்வே ஸ்டேசன் ஓரமாகத் தெற்கு நோக்கிச் செல்கின்றது. அதனைப் பொன்னி ஆறு என்பர். அதிலுள்ள மணலைக் கரைத்துப் பொன் சன்னமெடுக்கிறார்கள். உழைப்புக்குத்தக்க கூலி போல் கிடைக்கிறதாம். எட்டரை மாற்றுண்டு. இதுபோல் கொங்கு மண்டலத்துப்பெற்கனி உள்ள இடங்களிருக்கின்றன. வாதலால் ஆதித்தன் என்னுமரசன் கனக சபையாக்கப் பிரயத்தனப்பட்ட சமயத்தில் கொங்கு நாட்டில் விளைந்த தங்கத்தாலேயே பொன் ஓடு பாவினான்.



## திருக்கோயில் நடை திறந்திருக்கும் நேரம்

**காலை 6.30 முதல் 1.00 வரை**
**மாலை 4.00 முதல் 8.00 வரை**

வெள்ளி, சனி, ஞாயிறு மற்றும் விசேட நாட்களில் நாள் முழுவதும் திருக்கோயில் நடை திறந்திருக்கும்.

ஒவ்வொரு ஆடி அமாவாசையிலும் பல்லாயிரக்கணக்கான பக்தர்கள் அருள்மிகு சித்தேசுவர சுவாமியை வழிபட வருகின்றனர். சேலம் மாநகரிலிருந்து இத்திருக்கோயிலுக்கு தமிழ்நாடு அரசுப் போக்குவரத்துக் கழகத்தின் நகரப்பேருந்துகள் வந்து செல்கின்றன. பேருந்து எண்கள் 28ஏ, 29, 29ஏ, 68, 68பி, 75, 81, 91 மற்றும் இளம்பிள்ளை வழியாகச் செல்லும் புறநகர் பேருந்துகள். இவை அனைத்தும் பழைய பேருந்து நிலையத்திலிருந்து இயக்கப்படுகின்றன. அமாவாசைத் தினத்தன்று காலை முதல் இரவு வரை தமிழ்நாட அரசு போக்குவரத்துக் கழகம் சிறப்புப் பேருந்துகளை இயக்குகின்றது.

அமைவிடம் :- சேலத்திலிருந்து 15 கி.மீ. தொலைவில் உள்ளது.



